POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55
ANNA Leading Progressive Tamil Daily of the People

# சீசன்-டிக்கெட், சரக்குகட்டண உயர்வு இல்லை

Regd. No. TN . MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 26-2-1986 புதன் வெளியூர் 27-2-1986 வியாழன் [இதழ் 127

## ரெயில்வே பட்ஜெட் தாக்கல்

## மெயில்-எக்ஸ்பிரஸ் கட்டணத்தில் உயர்வு

**புதுடெல்லி, பிப். 26- மக்கள் சபையில் தாக்கல் செய்யப்பட்ட ரெயில்வே பட்ஜெட்டில் சீசன் டிக்கெட், சரக்குக் கட்டணம், சாதாரண ரெயிலுக்கான 2-ம் வகுப்பு கட்டணங்களில் உயர்வு இல்லை என அறிவிக்கப்பட்டுள்ளது.**

மக்கள் சபையில் இன்று 1986-87-க் கானரெயில்வே பட்ஜெட்டை ரெயில்வே அமைச்சர் பன்சிலால் தாக்கல் செய்தார்.

ரெயில்வே பட்ஜெட்டில் தெரிவிக்கப்பட்டுள்ள முக்கிய விவரங்கள் வருமாறு :-

எக்ஸ்பிரஸ் ரெயில்கள், மெயில் ரெயில்களில் எல்லா வகுப்பு பயணிகள் டிக்கெட் கட்டணமும் உயர்த்தப்பட்டுள்ளது.

சாதாரண ரெயில்களில் 2-ம் வகுப்பு பயணிகள் கட்டணம் உயர்த்தப்படவில்லை.

அதே போல் சரக்கு கட்டணமும் உயர்த்தப் படவில்லை.

நடப்பாண்டிற்கான திருத்தப்பட்ட ரெயில்வே பட்ஜெட்டில் 74 கோடி ரூபாய் உபரி கிடைத்துள்ளது.

மெயில்எக்ஸ்பிரஸ்ரெயில் டிக்கெட் கட்டண உயர்வு விவரம் வருமாறு;—

முதல் 250கிலோ மீட்டர் தூரத்திற்கு கட்டண உயர்வு 7.5 சதவிகிதமாக இருக்கும் 251 கிலோ மீட்டர் தூரத்திற்கும் கூடுதலான தூரத்திற்கான கட்டண உயர்வு 5 சதவிகிதமாக இருக்கும். 500 கிலோ மீட்டர் தூரத்திற்கு மேல் பயணத்திற்கான இரண்டாம் வகுப்பு ஸ்லீப்பர் சர்சார்ஜ் 10 ரூபாயில் இருந்து 15 ரூபாயாக அதிகரிக்கப் பட்டுள்ளது.

குளுகுளு வசதிகொண்ட முதல்வகுப்பு ஸ்லீப்பர், மற்றும் குளுகுளு வசதி கொண்ட ரெயில் கார் பயணக்கட்டணத்தில் 12.5 சதவிகிதம் உயர்த்தப் பட்டுள்ளது.

அதிவேகரெயிலானராஜஸ்தானி ரயிலின் கட்டணத்தில் 12 5 சதவிகிதம்உயர்த்தப்பட்டுள்ளது.

கட்டண சீரமைப்பின் மூலம் 76 கோடி ரூபாய் கூடுதல் வருவாய் கிடைக்கும். இந்த சீரமைப்பை அடுத்து ரெயில்வேயில் 69 கோடி ரூபாய் உபரியாக இருக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

புதிய கட்டண விகிதங்கள் ஏப்ரல் 1-ந்தேதி முதல் அமலாகும்.

### பன்சிலால்

பட்ஜெட்டை தாக்கல் செய்து பேசுகையில் ரெயில்வே அமைச்சர் பன்சிலால்கூறியதாவது:-

பற்றாக்குறையை சரிக்கட்ட ஓரளவிற்குகட்டணம் உயர்த்தப்பட்டுள்ளது.

சாதாரண ரெயிலுக்கான இரண்டாம் வகுப்பு கட்டணம், சீசன் டிக்கெட் கட்டணம், பார்சல் கட்டணமும் உயர்த்தப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு பன்சிலால் தெரிவித்துள்ளார்.

ரெயில்வேயில் போதுமான நிதி வசதி இல்லாததால் தற்போதைக்கு பயண போக்குவரத்தை அதிகரிப்பதற்கான வசதிகள்இல்லை எனவும் பன்சிலால் தெரிவித்தார்.

### சீசன் டிக்கெட்

ரெயில் பயணத்திற்கான சீசன் டிக்கெட் கட்டணத்தில் எந்தவித கூடுதலும் கிடையாது.

திருநெல்வேலிக்கும்-மீளவிட்டானுக்கும் இடையே புதிய ரெயில் பாதை அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது,



### 850 இந்தியர்கள் பாகிஸ்தானில் காணாமல் போயினர்

புதுடெல்லி பிப். 26— 1971ம் ஆண்டிலிருந்து 43 ராணுவ வீரர்கள் உட்பட 850 இந்தியர்கள் பாகிஸ்தானில் காணாமல் போய் உள்ளனர்.

பாகிஸ்தான் பிடித்துச் சென்ற 63 பேர் இந்தியாவுக்கு திருப்பி அனுப்பப் பட்டனர் என்று நாடாளு மன்றத்தில் வெளிவிவகார ராஜாங்க அமைச்சர் கே.ஆர். நாராயணன் கூறினார்.

## ஊராட்சி ஒன்றிய தலைவர்கள் தேர்தல்: கழக அணி முன்னணி

(பகல் 2 மணி நிலவரம்)

சென்னை, பிப். 26- ஊராட்சி ஒன்றியத் தலைவர்கள் தேர்தலில் முடிவு தெரிந்த 224 இடங்களில் கழக அணி 113 இடங்களில் வெற்றி பெற்றுள்ளது இதுதவிர 87 இடங்களில் முன்னிலையில் உள்ளது.

மாவட்ட வாரியான நிலவரம் வருமாறு:-

**கோவை**

| | |
|---|---|
| மொத்த இடம் | 20 |
| முடிவு தெரிந்தவை | —16 |
| கழகம் | 8 |
| காங்கிரஸ் | 4 |
| தி.மு.க. | 3 |
| சுயேச்சை | 1 |

**செங்கற்பட்டு**

| | |
|---|---|
| மொத்த இடம் | 27 |
| முடிவு தெரிந்தவை | 20 |
| கழகம் | 5 |
| காங்கிரஸ் | 1 |
| தி. மு. க. | 14 |

**தர்மபுரி மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்தம் | 18 |
| முடிவு தெரிந்தவை | 18 |
| கழகம் | 4 |
| காங்கிரஸ் | 2 |
| தி மு.க. | 7 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 1 |
| சுயேச்சைகள் | 4 |

**குமரி மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | 9 |
| முடிவு தெரிந்தவை | 9 |
| கழகம் | 1 |
| காங்கிரஸ் | 2 |
| தி மு க | 2 |
| ஜனதா | 1 |
| மார்ட்ச்சிஸ்ட் | 1 |
| சுயேச்சைகள் | 2 |

**மதுரை மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | 21 |
| முடிவு தெரிந்தவை | 19 |
| கழகம் | 5 |
| காங்கிரஸ் | 3 |
| தி. மு. க. | 6 |
| ஜனதா | 1 |
| மார்க்சிஸ்ட் | 1 |
| இந்தியகம்யூனிட்ஸ் | 1 |
| சுயேச்சைகள் | -3 |

**அண்ணா மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | -14 |
| அறிவிக்கப்பட்டவை | -13 |
| கழகம் | -4 |
| காங்கிரஸ் | -2 |
| தி. மு. க. | -5 |
| மார்க்சிஸ்ட் | 1 |
| சுயேச்சை | 1 |

**நீலகிரி மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்தம் | 4 |
| அறிவிக்கப்பட்டவை | 3 |
| காங்கிரஸ் | 2 |
| தி.மு க. | 1 |

**பெரியார் மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம்- | 20 |
| அறிவிக்கப்பட்டவை | 20 |
| கழகம்- | 13 |
| காங்கிரஸ்- | 3 |
| தி.மு க.- | 1 |
| இந்திய கம்யூனிஸ்ட்- | 1 |
| சுயேச்சை | 1 |

**புதுக்கோட்டை மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்தஇடம் | 13 |
| முடிவுதெரிந்தவை | 12 |
| கழகம் | -3 |
| தி.மு.க. | -6 |
| சுயேச்சை | -3 |

**சேலம்மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்தஇடங்கள் | -34 |
| முடிவு தெரிந்தவை | -29 |
| கழகம் | 12 |
| காங்கிரஸ் | -6 |
| தி.மு.க. | -6 |

**சுயேச்சைகள் -5**

**தென்னாற்காடு மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்தஇடம் | 34 |
| முடிவுதெரிந்தவை | 26 |
| கழகம் | 9 |
| காங்கிரஸ் | 4 |
| தி.மு.க. | 12 |
| சுயேச்சை | 1 |

**ராமநாதபுரம் மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | 11 |
| முடிவு தெரிந்தவை | 11 |
| கழகம் | 3 |
| காங்கிரஸ் | 2 |
| தி மு க | 5 |
| சுயேச்சை | 1 |

**காமராசர் மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | -11 |
| அறிவிக்கப்பட்டவை | 11 |
| கழகம் | -7 |
| காங்கிரஸ் | 1 |
| தி.மு.க. | -3 |

**முத்துராமலிங்கம் மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | 11 |
| அறிவிக்கப்பட்டது | 11 |
| கழகம் | 1 |
| காங்கிரஸ் | 5 |
| தி. மு. க. | 3 |
| சுயேச்சைகள் | 2 |

**நெல்லை மாவட்டம்**

| | |
|---|---|
| மொத்த இடம் | 31 |
| அறிவிக்கப்பட்டது | 24 |
| கழகம் | 8 |
| காங்கிரஸ் | 6 |
| தி.மு.க. | 8 |
| சுயேச்சை | 2 |

**வடாற்காடு**

| | |
|---|---|
| மொத்த இடம்: | 38 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 30 |
| கழகம் | 12 |
| காங்கிரஸ் | 3 |
| தி.மு க. | 13 |
| சுயேச்சை | 2 |

## முதல்பெண் ஜனாதிபதி அக்கினோவிற்கு தலைவர்கள் வாழ்த்து

மணிலா, பிப். 26— பிலிப்பைன்ஸ் நாட்டு ஜனாதிபதியாக பொறுப்பேற்றுள்ள திருமதி அக்கினோவே உலகின் முதல் பெண்ஜனாதிபதி ஆவார்.

திருமதி அக்கினோவிற்கு பல்வேறு நாடுகளின் தலைவர்கள் வாழ்த்து செய்தி அனுப்பியுள்ளனர்.

அமெரிக்க ஜனாதிபதி ரீகன் தொலைபேசி மூலம் திருமதி அக்கினோவிற்கு வாழ்த்து தெரிவித்துள்ளார்.

## சோவியத் விண்வெளிக் கலம்விழுந்து நொறுங்கும்

பான். பிப். 26— சோவியத் ரஷ்யா கடந்த டிசம்பர் 28-ந்தேதி காஸ்மாஸ் 1714 என்ற விண்வெளிக் கலத்தை வானில் செலுத்தியது. தற்போது பூமியை அது வலம் வந்து கொண்டிருக்கிறது.

இந்த விண்வெளிக் கலம் தற்போது கட்டுப்பாடின்றி சுற்றுவதாகவும் இன்னும் இரண்டொரு நாளில், கீழே விழுந்து நொறுங்கும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேற்கு ஜெர்மன்நிபுணர்கள்இதைத் தெரிவித்தனர்.

## எதிர்க்கட்சிகள் நடத்திய முழு அடைப்பு நிலவரம்

பம்பாய், பிப். 26— எதிர்க்கட்சிகள் இன்று நாட்டின்பல்வேறு பகுதிகளில் 'பந்த்' நடத்தின. பல மாநிலங்களில் பந்த் வெற்றிபெறவில்லை.

எதிர்க்கட்சிகள் நடத்திய பாரத் பந்த் கேரளாவில் வெற்றிபெறவில்லை.

கடைகள், ஓட்டல்கள் மூடப்பட்டிருந்தன. பஸ்கள், டாக்சிகள், ஆட்டோக்கள் ஓடின. வழக்கம் போல் ரயில்களும் ஓடின. தொழிலாளர்கள் பந்தில் முழு அளவில் பங்கேற்வில்லை.

### கோவா

கோவாவில் பந்த் ஓரளவு நடைபெற்றது. கடைகள் மூடப்பட்டிருந்தன.கோவாவில் தெருக்களில் மக்கள் நடமாட்டம்அவ்வளவாகக் காணப்படவில்லை. பஸ்கள் ஓடின.

பீகார் தலைநகரான பாட்னாவில் கடைகளை அடைக்குமாறு கம்யூனிஸ்ட் தலைவர் ராணாவதார் சாஸ்திரி தலைமையில் ஊர்வலமாக சென்று வலியுறுத்தினார்கள். சிலர் ஆட்டோ, கார் டயர்களின் காற்றை இறக்கிவிட்டனர்.

பம்பாயில் 'பந்த் அவ்வளவாக வெற்றி பெறவில்லை. சில இடங்களில் ரயில்களை நிறுத்தினார்கள்.

மராட்டியத்தின் மற்ற பகுதிகளிலும் 'பந்த்' அமைதியாக நடந்தது.

அஸ்ஸாம் மாநிலத் கச்சார்,கரீம் கஞ்ச் ஆ மாவட்டங்கள் தவிர ம இடங்களில் பந்த் வெற்றி பெறவில்லை. அரசு அலுவலகங்கள். வங்கிகள் வழக்கம் போல் செயல்பட்டன.

குஜராத்தில் அமைதியாக பந்த் நடந்தது. பஸ்கள் ரயில்கள் ஓடின.

கர்நாடகத்தில் 'பந்த்' அமைதியாக நடந்தது குறைந்த அளவு ஊழியர்களுடன் மத்திய-மாநில அரசு அலுவலகங்கள் செயல்பட்டன.

## மாநிலங்களவை புதிய துணைத் தலைவர் ஜேக்கப்

புதுடெல்லி, பிப். 26- மாநிலங்களவையின் புதிய துணைத் தலைவராக எம். எம்.ஜேக்கப் இ.காங்கிரஸ், தேர்ந்தெடுக்கப்பட்டார், அவரது பெயரை அவை முன்னவர் வி. பி. சிங் முன்மொழிந்திருந்தார்.

## மதுரை - அண்ணா மாவட்டங்களில் கழகம் பெற்ற வெற்றி

சென்னை, பிப். 26— நடைபெற்று முடிந்த ஊராட்சி ஒன்றியத் தேர்தலில் கழகம் - காங்கிரஸ் பெரும் வெற்றிபெற்றுள்ளது.

மதுரை மாவட்டத்தில் உள்ள கொட்டாம்பட்டி, வாடிப்பட்டி. சேடப்பட்டி, உசிலம்பட்டி, ஆண்டிப்பட்டி, தேனி ஆகிய ஒன்றியங்களில் தலைவராக கழகத்தின் சார்பில் போட்டியிட்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பெரியகுளம், கம்பம் சின்னமனூர் ஆகிய ஊராட்சி ஒன்றியங்களில் தலைவராக காங்கிரஸ் சார்பில் போட்டியிட்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அண்ணா மாவட்டத்தில் நத்தம், திண்டுக்கல், வடமதுரை. ஆத்தூர் ஆகிய ஒன்றியத் தலைவராக கழகத்தினர் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர்.

பழனி, நிலக்கோட்டை ஆகியஒன்றியத்தலைவராக காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

## பிலிப்பைன்சுக்கு இந்தியாவின் புதுதூதர்

புதுடெல்லி, பிப். 26— பிலிப்பைன்ஸ் நாட்டிற்கு இந்தியத் தூதராக கிருஷ்ணரகுநாத் நியமிக்கப்பட்டுள்ளார்.

ஆர்.என். முள்ளிக்குப் பதிலாக இவர் நியமிக்கப் பட்டுள்ளார்.

## அமெரிக்காவிற்கு சொந்தமான தீவில் மார்க்கோஸ் தஞ்சம்

வாஷிங்டன், பிப். 26- பசிபிக் கடலில் அமெரிக்காவிற்கு சொந்தமான தீவு ஒன்றுக்கு பிலிப்பைன்ஸ் நாட்டை விட்டு ஓடிய மார்க்கோஸ் போய் சேர்ந்துள்ளார்.

பிலிப்பைன்ஸ் நாட்டில், உள்ள அமெரிக்க ராணுவ தளத்தில் இருந்து போர் விமானம் ஒன்றில் சென்ற முன்னாள் ஜனாதிபதி மார்க்கோஸ் முதலில் எங்கு செல்லுகிறார் என்று சொல்லப் படவில்லை.

தற்போது மார்க்கோஸ் பசிபிக்குகாம் என்ற தீவுக்கு சென்றுள்ளார்.

மார்க்கோசுக்கு சிறுநீரக கோளாறு இருப்பதால் அவர் விரும்பினால் மருத்துவமனையில் சிகிச்சை பெறலாம் என வெள்ளை மாளிகை அறிவித்துள்ளது,

அமெரிக்க அதிபர் ரீகன் மார்க்கோசுக்கு கடிதம் ஒன்றை அனுப்பியுள்ளார்.

## அசாம்கண பரிஷத்துக்கு தேர்தல் கமிஷன் அங்கீகாரம்

புதுடெல்லி, பிப். 26- அசாம் மாநிலத்தில் புதிதாக ஆட்சியைக் கைப்பற்றியிருக்கும் அசாம் கணபரிஷத்கட்சிக்கு தேர்தல் கமிஷன் தனது அங்கீகாரத்தை வழங்கியுள்ளது. அக்கட்சியின் யானை சின்னத்தையும் தேர்தல் கமிஷன்அங்கீகரித்துள்ளது

## அயர்லாந்து தூதராக பிரேம்சங்கர் நியமனம்

புதுடெல்லி. பிப் 26— மத்திய வெளி விவகார அமைச்சகத்தில் கூடுதல் செயலாளராக பணியாற்றி வரும் பிரேம்சங்கர் அயர்லாந்து நாட்டில் இந்திய தூதராகநியமனம் செய்யப் பட்டுள்ளார்

## பம்பாயில்தடியடி

பம்பாய், பிப். 26— பம்பாயில் தாதர் ரெயில் நிலையத்தில் ஜனதா தொண்டர்கள் ரெயில் நிறுத்த போராட்டம் நடத்த ஜார்ஜ் பெர்னாண்டஸ் தலைமையில் சென்றனர். போலீசார் அவர்களை கலைந்துபோக சொன்னார்கள் அவர்கள் மறுக்கவே தடியடி நடத்தப்பட்டது ஒரு தொண்டர் படுகாயமுற்றார்.

## எதிர்கட்சி உறுப்பினர்கள் வெளிநடப்பு

புதுடெல்லி, பிப். 26 — இன்று நாடாளுமன்றத்தில் எதிர்கட்சி உறுப்பினர்கள் "பாரத்பந்த்" பற்றிய பிரச்சினையை கிளப்பினார்கள்.

அதுபற்றி சபாநாயகர் பால்ராம்ஜாக்கர் எந்தவித நடவடிக்கையும் எடுக்கவில்லை.

இதை எதிர்த்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட், அகாலிதளம்.லோக்தளம், பாரதிய ஜனதா ஆகிய எதிர்க்கட்சி உறுப்பினர் வெளிநடப்புச் செய்தனர்,

## ஊராட்சி ஒன்றியங்கள் தேர்தல் முடிவுகள்

**பகல் 2 மணி நிலவரம்**

| | |
|---|---|
| மொத்த இடங்கள் | 382 |
| முடிவு தெரிந்தவை | 335 |

| | வெற்றி |
|---|---|
| கழகம் | 106 |
| காங்கிரஸ் | 55 |
| தி.மு.க. | 131 |
| ஜனதா | 4 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 4 |
| மார்க்சிஸ்ட் | 6 |
| சுயேச்சைகள் | 29 |

## விவாகரத்து: முஸ்லிம் பெண்கள் முறையீடு

அமராவதி, பிப்- 26— விவாகரத்து செய்யப்பட்ட முஸ்லிம் பெண்கள் பிரதமர் ராஜீவ் காந்தியைச் சந்தித்து முஸ்லிம் திருமணங்களையும் கட்டாயம் பதிவு செய்ய வேண்டும் என்று வலியுறுத்தினர்.

விவாகரத்து செய்யப்பட்ட 18பெண்களும், முஸ்லிம் மதத்தைசசேர்ந்த மற்ற 15பேரும் பிரதமர் ராஜீவ்காந்தியைச் சந்தித்தனர்.

ஷாபானு என்றமுஸ்லிம் பெண் தொடர்ந்த வழக்கில் சுப்ரீம்கோர்ட் அளித்த தீர்ப்பைமாற்றக் கூடாது என்று அந்தப்பெண்கள் கூறினார்கள்.

ஒரு முஸ்லிம் எத்தனை பெண்ணையும் திருமணம் செய்யலாம் என்ற முறை கூடாது.

முஸ்லிம்கள் வெகுசுலபத்தில் விவாகரத்து செய்யும் நிலை கூடாது விவாகரத்து செய்யப்படும் பெண்களுக்கு ஜீவனாம்சம் தரப்படவேண்டும் என்று சுப்ரீம் கோர்ட்டில் தீர்ப்பு அளிக்கப்பட்டது.

இந்தத்தீர்ப்பை முஸ்லிம்களில் ஒரு பகுதியினர் எதிர்க்கிறார்கள்.

ஆனால்சிலமுஸ்லிம்பெண்கள் இது சரியான தீர்ப்பு என்று பாராட்டுகிறார்கள்.

சுப்ரீம் கோர்ட் தீர்ப்பை ஏற்காமல் இருந்துவிடக் கூடாது என்று அந்தபெண்கள் பிரதமரிடம் கூறினர்.

முஸ்லிம்கள் ஆனாலும் எந்த மதத்தைச் சேர்ந்தவர்களானாலும் திருமணத்தைப்பதிவு செய்து கொள்ள வேண்டும் என்று விதிமுறை கொண்டு வரவேண்டும் என்று அவர்கள் வலியுறுத்தினர். இதன் மூலம் விவாகரத்து குறையும் என்று அவர்கள் கூறினர்,

மற்றொரு முஸ்லிம் பெண்கள் சங்கம் மத்திய அரசு முஸ்லிம் பெண்கள் பறிற் மசோத கொண்டு வருவதை எதிர்த்துள்ளது.

வாழ்க்கை

பல்வேறுமொழிஇன மக்களாயினும், அனைவரிடையேயும் வாழ்க்கை முறை என்பது ஒரு நெறிப்பட்டதாயிருக்கிறது.

— பேரறிஞர் அண்ணா

விருந்து

விருந்தோம்புதல் தமிழர்க்கு ஒரு நீங்கா கடமை என சொல்லப்படுகிறது பொருளாதார நிலையைக் கடந்தது இந்தக் கடமை'

—தந்தை பெரியார்

# அரசு முத்திரை இல்லாத ஒரு ரூபாய் நாணயங்கள்

பம்பாய், பிப். 26— நாணயத்தின் இரு பக்கத்திலும் அரசு முத்திரையோ அல்லது நாணயத்தின் மதிப்போ பொறிக்கப்படாத ஒரு ரூபாய் வடிவ நாணயங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

சுமார் இரண்டாயிரம் நாணயங்களை சாந்தியில் உள்ள சங்வீ என்ற பள்ளி ஆசிரியர் பம்பாயிலுள்ள பி டி ஐ நிறுவனத்துக்கு கொண்டு வந்து காட்டியுள்ளார். இந்த நாணயங்கள் எப்படி எந்த முத்திரையுமின்றி வெளிவந்தன என்பது பற்றி அறிய சங்வீ ரிசர்வ் வங்கியையும் அணுகியுள்ளார்.

# மத்திய அரசு பட்ஜெட் தாக்கல் செய்யும் நேரம் எது?

மத்திய அரசின் வரவு செலவு திட்டம் தாக்கல் செய்யும் நேரம் எது?

பொதுவாக பிப்ரவரி மாதம் 28-ந்தேதி மாலை 5மணிக்குத் தாக்கல் செய்யப்படுகிறது.

சமீபத்தில் மத்திய நிதி அமைச்சர் விஸ்வநாத் பிரதாப்சிங் நிருபர்களைச் சந்தித்துப்பேசினார்.

''மாலை 5 மணிக்கு பட்ஜெட் தாக்கல் செய்கிறீர்கள். இதனால் பட்ஜெட் விவரங்களைப் படித்து பத்திரிகைகளுக்கு விவரமாக அனுப்புவதில் சிரமம் ஏற்படுகிறது. 5 மணி என்பதை மாற்றி கொஞ்சம் முன்கூட்டியே தாக்கல் செய்ய முடியாதா'' என்று வி.பி.சிங்கிடம் நிருபர்கள் கேட்டனர்.

''பார்க்கலாம்'' என்று மத்திய அமைச்சர் சிங் பதிலளித்தார். எந்த வாக்குறுதியையும் அவர் கொடுக்கவில்லை.

மத்திய அரசின் பட்ஜெட் விவரம் பல புத்தகங்களில் அடங்கி இருக்கும் அவை முழுவதையும் படித்துப் பார்த்துவிட்டு சுருக்கமாக- புரியுமாறு முக்கிய விஷயங்களை பத்திரிகைகளில் எழுதவேண்டியுள்ளது.

5மணிக்கு நாடாளு மன்றத்தில் பட்ஜெட் தாக்கல் ஆகிறது நிருபர்களிடம் 6 மணிக்கு பட்ஜெட் புத்தகங்கள் கொடுக்கப்படுகின்றன இதைப்படித்து விட்டுஎழுத நேரம் ஆகி விடுகிறது, பட்ஜெட்டுடன் முக்கிய விவரங்கள் அடங்கிய குறிப்பு ஒன்றையும் மத்திய அரசு கொடுக்கிறது பெரும்பாலும் அந்த குறிப்பைப் பார்த்தே மக்களுக்கு விவரங்களைக் கொடுக்க வேண்டியுள்ளது.

அரசு விதிகளின்படி பட்ஜெட் விவரங்கள நிதி சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டதும்நாடு முழுவதும் தெரியப்படுத்த பட்டுவிட வேண்டும்.

ஆனால் இப்போதுள்ள நிலவரப்படி மாலை 5 மணிக்கு பட்ஜெட் தாக்கல் செய்யப்பட்டாலும் 6 மணிக்குப் பிறகு தான் வெளியிடங்களுக்குச் செய்தி போகும் நிலைமைஉள்ளது.

பட்ஜெட் புத்தகங்கள் டெல்லியிலிருந்துவிமானங்களில் பல்வேறு நகரங்களுக்கு உடனே அனுப்பப் படுகின்றன.

பிப்ரவரி கடைசி நாள் மாலை 5 மணிக்கு பட்ஜெட் தாக்கல் செய்யும் முறையில் எந்த முக்கியத்துவமும் இல்லை நீண்ட காலமாக இந்த வழக்கம் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது.

நிதி ஆண்டு தொடங்குவதற்கு முன்பாக பட்ஜெட் தாக்கல் செய்யப்பட வேண்டும் என்ற முறை இருந்து வருகிறது.

## முதல் பட்ஜெட்

இந்தியாவின் முதல் பட்ஜெட் 1860 பிப்ரவரி 18ந் தேதி தாக்கல் செய்யப்பட்டது.

அப்போது நிதி ஆண்டு மே மாதம் 1-ந் தேதி தொடங்கியது.

இந்தியாவின் முதல் பட்ஜெட்டை தாக்கல் செய்தவர் ஜேம்ஸ்வில்சன் இவர் அப்போது மத்திய அரசின் நிதி உறுப்பினர் (நிதி அமைச்சர்) ஆக இருந்தவர்.

அடுத்த ஆண்டு (1861ல்) ஏப்ரல் 27-ந் தேதி பட்ஜெட் தாக்கல் செய்யப்பட்டது.

பின்னர் மார்ச் மாதம் பட்ஜெட் தாக்கல் செய்யும் முறை வந்தது.

1920ல் இந்திய சட்ட விதிமுறைகளின்படி கவர்னர் ஜெனரல் குறிப்பிடும் நாளில் பட்ஜெட் தாக்கல் செய்யப்படவேண்டும் என்று விதி அமைக்கப்பட்டது.

பிப்ரவரி மாதம் கடைசி நாள் பட்ஜெட் தாக்கல் செய்யும் முறையை அப்போதைய நிதி உறுப்பினர் சர் பாசில் பிளாக்கெட் கொண்டு வந்தார். 1924 பிப்ரவரி 29ந்தேதி அவர் பட்ஜெட் தாக்கல் செய்தார்.

இந்த மாற்றத்துடன் பட்ஜெட் தாக்கல் செய்யும் நேரமும் மாற்றப்பட்டது.அப்போது பட்ஜெட்டின் பெயர் ''பைனான்சியல் ''ஸ்டேட்மெண்ட்'' என்பதாகும். காலை வேளையில் பைனான்சியல் ஸ்டேட்மெண்ட தாக்கல் செய்யப் படும்.

சர் பாசில் பிளாக்கெட் தான் அதைமாற்றி மாலை 5 மணிக்குபட்ஜெட் தாக்கல் செய்தார்.

நிதி மசோதாவை பட்ஜெட்டுக்கு மறுநாள் தாக்கல் செய்தார் அவர்.

பட்ஜெட்டை மாலையில் தாக்கல்செய்வது ஏன் என்பதற்கு பிளாக்கட்சொன்ன காரணம்;

'பகலில் பட்ஜெட்டை தாக்கல் செய்தால் வர்த்தக நிறுவனங்கள் அதைப் படிப்பதில் சிரமம் எடுத்து கொள்ளும். மாலையில் தாக்கல்செய்தால் இரவில், தாராளமாக படித்து அவற்றை புரிந்து கொள்ள அவகாசம் கிடைக்கும்'' என்று விளக்கம் சொன்னார்.

அந்த முறை பின் பற்றப்படுகிறது. ஜனாதிபதி குறிப்பிடும் நாளில் பொது பட்ஜெட் தாக்கல்செய்யப் படும் என்று விதி இருந்தாலும் பிப்ரவரிமாதம்கடைசி நாள் மாலை 5மணிக்கே பட்ஜெட்தாக்கல் செய்யப் படும் என்று ஜனாதிபதி அறிவிக்கிறார்.

மேலும் மாலை 5 மணிக்கு பட்ஜெட் தாக்கல் செய்யும் முறை வெள்ளையர் ஆட்சிகாலத்தில் வந்ததற்கு இன்னொரு காரணமும் உண்டு.

மாலை 5 மணிக்கு பட்ஜெட் தாக்கல் செய்தால் இங்கிலாந்து நாடாளுமன்றம் கூடும் நேரத்துக்கு அந்த விவரம் போய் சேர சரியாக இருக்கும். என்பதும் ஒரு காரணமாகும்.

இப்போது அதிகாரிகள் கூறும் காரணம்.

வங்கிகள், பங்கு மார்க்கெட்டுகள் ஆகியவை 5 மணிக்கு மூடப்படும்.அதன்பின் பட்ஜெட் வருவதுதான் முறை

ஆனால் அது ஏற்புடைத்தலல என்ற கருத்து உள்ளது பட்ஜெட் தாக்கல் செய்யும் நாளன்று பங்கு மார்க்கெட்டுகளை மூடச் செய்து விடலாம் என்ற கருத்து நிலவுகிறது.

பட்ஜெட்டில் புதிய திட்டங்களை பகலிலேயே அறிவிக்கலாம்.

வரிவிதிப்புகள், வரிமாற்றங்கள் ஆகியவற்றை மாலையில் அறிவிக்கலாம் என்று கருத்துக் கூறப்பட்டது. ஆனால்இரண்டையும் ஒரே நேரத்தில் அறிவிக்க வேண்டும் என்று விதி உள்ளது.

# 'சிதம்பரம்' படத்துக்கு விருது

திருவனந்தபுரம்,பிப் 26- அரவிந்தன் டைரக்ட்செய்த ''சிதம்பரம்' என்ற மலையாள படத்துக்கு கேரள மாநில அரசின் விருது கிடைத்துள்ளது.

சிறந்தபடம், சிறந்த டைரக்டருக்கான பரிசு உட்பட 5 பரிசுகளை இந்தப் படம் பெற்றுள்ளது

சிறந்த நடிகராக கோபி சிறந்த நடிகையாக சீமா, சிறந்த பாடலாசிரியராக பாஸ்கரன் சிறந்த இசை அமைப்பாளராக ஜி. தேவராஜன் சிறந்த கதாசிரியராக வாசுதேவன் நாயர் ஆகியோர் தேர்வு பெற்றனர்.

# ஒன்றிய தலைவர் தேர்தலில் கழகம் பெற்ற ஓட்டு விவரம்

சென்னை, பிப். 26— ஊராட்சி ஒன்றியத்தலைவர் தேர்தலில் கழக வேட்பாளர்கள் பெருவாரியான வாக்குகளை பெற்று வெற்றி பெற்றுள்ளனர்.

கழக அணி கைப்பற்றிய ஊராட்சிஒன்றிய தலைவர் பதவிக்கானதேர்தல் முடிவுகள் விவரம் வருமாறு:-

கொல்லிமலை (கழகம் வெற்றி)

கொல்லிமலை ஊராட்சி ஒன்றிய தலைவர் தேர்தலில் கழகத்தைச் சேர்ந்த பி. துரைசாமி வெற்றி பெற்றுள்ளார்.

ஓட்டு விவரம் வருமாறு:

பி. துரைசாமி கழகம் 4808

வி கே.,ராஜி மார்க்சிஸ்ட் 2887

## கொங்கனாபுரம்

கொங்கனாபுரம் ஊராட்சி ஒன்றியத் தலைவர் தேர்தலில் கழக வேட்பாளர் பி.ராமமூர்த்தி வெற்றி பெற்றுள்ளார்.

பி ராமமூர்த்தி கழகம் 11658

வி முத்துசாமி தி மு.க. 8032

## பொன்தடம்

பொன்தடம்பஞ்சாயத்து யூனியனை கழகம் கைப்பற்றியுள்ளது. கழக வேட்பாளர் துரைராஜ் வெற்றி பெற்றுள்ளார்.

துரைராஜ் (கழகம்)-23754

முத்து (தி.மு.க.) 10603

## கந்தர்வகோட்டை

புதுக்கோட்டை மாவட்டம் கந்தர்வகோட்டை ஒன்றியத் தலைவர் தேர்தலில் கழக வேட்பாளர் சாமிநாத மழவராயர் வெற்றி பெற்றுள்ளார்.

ஓட்டு விவரம் வருமாறு:

சாமிநாத மழவராயர் கழகம் 18707

மாரியய்யா தி மு க. 10243

## கிருஷ்ணகிரி

கிருஷ்ணகிரி ஒன்றிய தலைவராக கழக வேட்பாளர் ராஜன் தேர்த்தெடுக்கப்பட்டுள்ளார். ராஜனுக்கு 22792 வாக்குகளும், தி. மு. க. வேட்பாளர் அண்ணாமலைக்கு 10596 வாக்குகளும் கிடைத்துள்ளன.

## மதுக்கரை

கோவை மாவட்டம் மதுக்கரை பஞ்சாயத்து யூனியன் தலைவராக கழகத்தைச் சேர்ந்த திருமலைசாமி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

திருமலைசாமி 18208 வாக்குகளும், இந்திய கம்யூனிஸ்டு கட்சியைச் கோவிநதராசன் 8120 வாக்குகளும் பெற்றுள்ளார்.

# உரிமை பிரச்சினைக்கு அனுமதி மறுப்பு

புதுடெல்லி, பிப். 26— மத்திய துணை அமைச்சர்கள் அன்சாரி, ஆரிப்மகம்மது ஆகியோர் மீது இன்று நாடாளுமன்றத்தில்உரிமை பிரச்சினை கொண்டுவரப் பட்டது

முஸ்லிம் மூதாட்டி ஷாபானு பற்றிய சுப்ரீம் கோர்ட் தீர்மானத்துக்கு எதிரான கருத்துக்களை இந்த 2 அமைச்சர்களும் தெரிவித்ததாக உரிமை மீறல் பிரச்னையில் கூறப்பட்டிருந்தது.

இந்த உரிமை மீறல் தீர்மானத்துக்கு சபாநாயகர் பல்ராம் ஜாக்கர் அனுமதி மறுத்தார்.

# சீன-பாகிஸ்தான் எல்லை ஆய்வுக்குழு: உடன்பாடு ஏற்பட்டது

பீஜிங், பிப். 26— சீனா - பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளுக்கிடையேயான எல்லை பற்றிய உடன்பாடுஒன்று பீஜிங்கில் கையெழுத்தானதாக சீனாவில் உள்ள செய்தி நிறுவனம் ஒன்று தெரிவித்துள்ளது.

காஷ்மீர் எல்லையில்சில பகுதிகளை பாகிஸ்தான் தன்னுடைய வசத்தில் வைத்துக் கொண்டுள்ளது. இந்தப்பகுதிகள் சீன எல்லையை யொட்டி உள்ளன.

சீனாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே எல்லைப்பகுதிகள் பற்றிய பேச்சுவார்த்தை இந்த இரு நாடுகளுக்கு இடையே நடந்துவந்தது. இரு நாடுகளும் ஒரு ஆய்வுக் குழுவை நியமித்து இந்த எல்லை தகராறுகளைதீர்ப்பதில் ஈடுபட்டு வந்தன.

கடந்த 10-ம் தேதி முதல் 24ந்தேதிவரை இந்தபேச்சுவார்த்தை நடந்தது இதில் இருநாடுகளுக்கும் ஒரு உடன்பாடு ஏற்பட்டதாக அந்த செய்தி நிறுவனம் தெரிவித்தது.

எல்லைத் தகராறு பற்றிய உடன்பாடு கடந்த திங்கட்கிழமை அன்று கையெழுத்தானதாக தெரிவித்தது.

பாகிஸ்தான் வசம் உள்ள காஷ்மீர் பகுதியான காரகோரம் மலைப்பகுதியை யொட்டிஎல்லை நிர்ணயம் செய்யப்பட்டதாகவும்தெரிவிக்கப்பட்டுள்ளது.

பாகிஸ்தான் வசம் உள்ள காஷ்மீர் பகுதிகளைபாகிஸ்தான் தன்னுடைய புவியியல் வரை படத்தில் கோடிட்டு காட்டியிருந்தாலும் அதை சீனா ஒத்துக் கொள்ளவில்லை என்றே தெரிகிறது. ஏன் என்றால் சீனாவினுடைய பூகோள படத்தில் இந்த காஷ்மீர் பகுதிகள் இல்லை. உடன்படிக்கை ஏற்பட்டதாக அறிவிக்கப்பட்டிருந்தாலும் சீனாவுக்கும், பாகிஸ்தானுக்கும் இடையே பொதுவான எல்லை எதுவும் நிர்ணயிக்கப்படவில்லை,

ஜம்மு- காஷ்மீர் பகுதிகளை ஒரு ஒருங்கிணைந்த பகுதியாகவே சீனா தன்னுடையபூகோள படத்தில் காட்டியிருக்கிறது,

சீனா பாகிஸ்தான் உடன்பாடு சர்வதேசஅடிப்படையில் ஒப்புக்கொள்ளப்படுமா என்பதுசந்தேகமே.

# 75 இடங்களில் எண்ணெய் கிணறு

புதுடெல்லி. பிப். 26- இந்தியாவில் 75 எண்ணெய் கிணறுகளை ரஷ்யா தோண்டித்தர முன் வந்துள்ளது.

காம்பேகுடா மற்றும் காவேரி படுகை ஆகிய இடங்களில் எண்ணை வளம் அதிகமாக உள்ளது. விண்வெளிக்கலம் அனுப்பிய புகைப்படங்கள் மூலம் இந்த எண்ணை வளம் கண்டுபிடிக்கப்பட்டது.

எண்ணை வளம் உள்ள காவிரி படுகை மற்றும காம்பேகுடாப் பகுதி ஆகியவற்றில் எண்ணைக் கிணறுகள் தோண்டித்தர சோவியத் ரஷ்யா முன்வந்துள்ளது.75கிணறுகள் தோண்டப்பட இருக்கின்றன என்று நாடாளுமன்ற மக்களைவையில் பெட்ரோலிய ராஜாங்க அமைச்சர் சந்திரசேகர் சிங் தெரிவித்தார்.

1986-1992க்குள் காம்பேகுடாப் பகுதியில் 38 கிணறுகள் தோண்டப்படும். இவற்றின் மொத்த ஆழம் 81,500 மீட்டராக இருக்கும்.

# பேரூராட்சித் தலைவர் தேர்தல்: முடிவுகள் விவரம்

## மதியம் 12 மணி நிலவரம்

சென்னை, பிப். 26 — பேரூராட்சித் தலைவர்கள் தேர்தலுக்கான முடிவு தெரிந்த 355 இடங்களில் கழக அணி 127 இடங்களில் வெற்றி பெற்றுள்ளது.

பேரூராட்சிகளின் வாக்கு எண்ணிக்கை விவரம் வருமாறு;

மொத்த பேரூராட்சிகள் 628

| | |
|---|---|
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 355 |
| கழகம் | 74 |
| காங்கிரஸ் | 53 |
| தி. மு. க. | 100 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 8 |
| மார்க்சிய கம்யூனிஸ்ட் | 13 |
| ஜனதா | 11 |
| பாரதிய ஜனதா | 2 |
| சுயேச்சை | 94 |

மாவட்ட வாரியாகமுடிவு வருமாறு:—

### செங்கற்பட்டு

| | |
|---|---|
| மொத்த பேரூராட்சி | 39 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 11 |
| காங்கிரஸ் | 1 |
| தி.மு.க. | 6 |
| இந்தியகம்யூனிஸ்டு | 1 |
| மார்க்சிய கம்யூனிஸ்ட் | 1 |
| சுயேச்சை | 2 |

### வடாற்காடு

| | |
|---|---|
| மொத்த இடம் | 38 |
| முடிவுஅறிவிக்கப்பட்டவை | 26 |
| கழகம் | 3 |
| காங்கிரஸ் | 3 |
| திமுக | 13 |
| மார்க்சிஸ்ட் | 1 |
| ஜனதா | 1 |
| சுயேச்சை | 5 |

### சேலம்

| | |
|---|---|
| மொத்தம் இடம் | 55 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை: | 16 |
| கழகம் | 4 |
| காங்கிரஸ் | 1 |
| தி. மு. க. | 5 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 1 |
| ஜனதா | 1 |
| சுயேச்சை | 4 |

### பசும்பொன்

| | |
|---|---|
| மொத்த இடம் | 12 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 11 |
| கழகம் | 3 |
| காங்கிரஸ் | 3 |
| தி மு க | 3 |
| சுயேச்சை | 2 |

### ராமநாதபுரம்

| | |
|---|---|
| மொத்த இடம் | 8 |
| முடிவுஅறிவிக்கபட்டவை | 3 |
| கழகம் | 1 |
| சுயேச்சை | 2 |

### திருச்சி

| | |
|---|---|
| மொத்த இடம் | 46 |
| முடிவு அறிவிக்கப்பட்டவை | 30 |
| கழகம் | -6 |
| காங்கிரஸ் | -4 |
| தி.மு.க. | -10 |
| ஜனதா | -1 |
| சுயேச்சை | -9 |

### நீலகிரி

| | |
|---|---|
| மொத்த இடம் | -21 |
| அறிவிக்கப்பட்டவை | -21 |
| கழகம் | -3 |
| காங்கிரஸ் | -7 |
| தி.மு க. | 8 |
| இந்தியகம்யூனிஸ்ட் | 1 |
| சுயேச்சை | 2 |

### கன்னியாகுமரி

| | |
|---|---|
| மொத்த இடம் | 66 |
| அறிவிக்கப்பட்டவை | 61 |
| கழகம் | 8 |
| காங்கிரஸ் | 5 |
| தி.மு க. | 6 |
| இந்தியகம்யூனிஸ்டு | 1 |
| மார்க்சிஸ்டு | 6 |
| ஜனதா | 6 |
| பாரதியஜனதா | 2 |
| சுயேச்சை | 27 |

### தென்னாற்காடு

| | |
|---|---|
| மொத்தஇடம் | 31 |

| | |
|---|---|
| முடிவுஅறிவிக்கப்பட்டவை | 21 |
| கழகம் | 7 |
| காங்கிரஸ் | 2 |
| தி.மு.க. | 10 |
| சுயேச்சை | 2 |

### தஞ்சை

| | |
|---|---|
| மொத்த இடம் | 40 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 19 |
| காங்கிரஸ் | 6 |
| தி மு,க. | 8 |
| மார்க்சிஸ்ட் | 1 |
| சுயேச்சை | 4 |

### கோவை

| | |
|---|---|
| மொத்த இடம் | 58 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 32 |
| கழகம் | 8 |
| காங்கிரஸ் | 8 |
| தி. மு. க. | 7 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 1 |
| சுயேச்சை | 8 |

### அண்ணா

| | |
|---|---|
| மொத்த இடம் | 24 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 14 |
| கழகம் | 3 |
| காங்கிரஸ் | 2 |
| தி.மு.க. | 3 |
| மார்க்சிஸ்டு | 1 |
| ஜனதா | 1 |
| சுயேச்சை | 4 |

### தர்மபுரி

| | |
|---|---|
| மொத்த இடம் | 18 |
| முடிவுஅறிவிக்கப்பட்டவை | 17 |
| கழகம் | 4 |
| காங்கிரஸ் | 1 |
| தி மு க. | 7 |
| ஜனதா | 1 |
| சுயேச்சை | 4 |

### பெரியார்

| | |
|---|---|
| மொத்தஇடம்: | 61 |
| முடிவு அறிவிக்கப்பட்டவை | 58 |
| கழகம் | 18 |
| காங்கிரஸ் | 9 |
| தி மு க. | 11 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 2 |
| சுயேச்சை | 18 |

### காமராசர்

| | |
|---|---|
| மொத்த இடம் | 10 |
| முடிவு அறிவிக்கப் பட்டவை | 10 |
| கழகம் | 4 |
| காங்கிரஸ் | 1 |
| தி. மு க | 3 |
| மார்க்சிஸ்ட் | 2 |

### புதுக்கோட்டை

| | |
|---|---|
| மொத்த இடம் | 8 |
| முடிவுஅறிவிக்கபட்டவை | 5 |
| கழகம் | 2 |
| இந்திய கம்யூனிஸ்டு | 1 |
| ஜனதா | 1 |
| சுயேச்சை | 1 |

# 'செக்ஸ்' சாமியார் ரஜினீஷ் மேற்குஜெர்மனி செல்கிறார்

பான், பிப். 26— இந்தியாவில் இருந்து ரகசியமாக அமெரிக்காவுக்கு ஓடிய செக்ஸ் சாமியார் அமெரிக்காவில் இருந்து விரட்டப்பட்டது தெரிந்ததே.

மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பியரஜினீஷ்சாமியார் எங்கே நிரந்தரமாக தங்குவது என்று நிலை கொள்ளாமல் இருந்தார்.

இந்தியாவில் இருந்து நேப்பாளம் சென்றவர் பின்னர் ரகசியமாக தாய்லாந்துக்குப் பயணம் ஆனார். ஆனால் அவரது விமானம் கிரீசில் இறங்கியது. கிரீஸில் உள்ள தீவு ஒன்றில் அவர் தனது ஆசிரமத்தைஅமைப்பார்என்று சொல்லப்பட்டது.

இப்போது மேற்கு ஜெர்மனிக்கு அவர் செல்கிறார், மேற்கு ஜெர்மனியில் தனக்கு 25 ஆயிரம் சீடர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குச் சொந்தமான ஏராளமான ஓட்டல்களும் தியான நிலையங்களும் நாடு பூராவும் பரந்துகிடக்கின்றன என்றும் ரஜினீஷ் கூறினார்.

# ஈரான் ரசாயன குண்டுவீச்சு

டெகரான், பிப். 26— ஈரானுக்கும் ஈராக்குகும்ம் கடும் போர்நடந்து வருகிறதுஈராக்மீது ஈரான்போர் விமானங்கள் ரசாயன குண்டுகளை வீசியதாக ஈராக் குற்றம் சாட்டியுள்ளது.

# அரசு உத்தரவை மீறி பின்னி ஆலை மூடல்

சென்னை. பிப். 26- தமிழக அரசு உத்தரவை மீறி பின்னி என்ஜினீயரிங் டிவீஷன் மூடப்பட்டது.

பின்னி கம்பெனியின் என்ஜினீயரிங் பிரிவில் தொழிலாளர் பிரச்சினை ஏற்பட்டது.

இது சம்பந்தமாக சமீபத்தில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு அளிக்கையில் மாநில அரசு உதவியுடன் அந்தப் பிரச்சினையைத் தீர்க்குமாறு குறிப்பிட்டிருந்தது.

என்றாலும் அந்த நிறுவனத்தை மூட நிர்வாகம் முடிவு எடுத்தது ஆனால் அதை மூடுவதற்கு தமிழக அரசின் தொழிலாளர் நலத்துறை அனுமதி மறுத்தது என்றாலும் நிர்வாகம் கதவடைப்பை மேற்கொண்டுள்ளது.

தொழிலாளர்களில் ஒரு பிரிவினர் பயங்கரவாத செயல்களில் ஈடுபட்டிருப்பதாகவும்நிர்வாகம் [illegible] அதிகாரிகள் [illegible] பாதுகாப்பைக் கருதி ஆலையை மூட நேரிட்டது என்றும் நிர்வாகம் அறிவித்துள்ளது.

# காணவில்லை

சென்னை, பிப். 26— சென்னை கீழ்ப்பாக்கம் மருத்துவக்கல்லூரி மருத்துவமனை காவல்நிலையத்தில்காவலராகபணிபுரிபவர் ஞானப்பிரகாசம். ஆயிரம் விளக்குப்பகுதியில் இவர் வசித்துவருகிறார்.

நாகர் கோவிலில் உள்ள தனது அண்ணன் ஆரோக்கியத்தின் மகன் மைக்கேல் தாஸ் (வயது 10) போலீஸ்காரர் ஞானப்பிரகாசத்தின் வீட்டில் தங்கி படித்து வந்தான்.

இந்த மாதம் 22ம் தேதியில் இருந்து இந்தச் சிறுவனைக் காணவில்லை.

இதுபற்றிய புகாரைத் தொடர்ந்து ஆயிரம் விளக்கு போலீசார் சிறுவனைத் தேடிவருகிறார்கள்

# மணலியில் ரூ. 130 கோடியில் புதிய ரசாயன தொழிற்சாலை

சென்னை, பிப். 26— சென்னையை அடுத்த மணலியில் 'ஸ்பிக்' நிறுவனம் தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகத்துடன் இணைந்து 130 கோடி ரூபாயில் புதிய ரசாயனத் தொழிற்சாலை அமைக்க முயற்சி எடுத்து வருகிறது.

இதுகுறித்து 'ஸ்பிக்' நிறுவனதலைவர் எம். ஏ சிதம்பரம் நிருபர்களிடம் கூறியதாவது:

மணலியில் லீனியர் ஆல்கைல் பென்சீன்' என்ற ரசாயன உரம் தயாரிக்கும் தொழிற்சாலை நிறுவ முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன தமிழ்நாடு மெட்ரோ ப்ராடக்ட்ஸ் லிமிடெட் என்ற இந்த நிறுவனம் இந்த ஆண்டுக்குள் செயல்பட துவங்கும்

இந்த தொழிற்சாலைக்கு இடை விடாது அமிலம் கிடைப்பதற்காக 15 கோடி ரூபாய் செலவில் அமிலம் [illegible] கப்பல் ஒன்றை 'ஸ்பிக்' வாங்கியுள்ளது மேலும் ஒரு கப்பல் வாங்க முயற்சி எடுக்கப்பட்டுள்ளது.

கம்ப்யூட்டர் டேப்புகள், வீடியோ டேப்புகள் தயாரிப்பதற்காக அமெரிக்க கூட்டுறவுடன் 35 கோடி ரூபாயில் 'ஸ்பிக்' எலக்ட்ரானிக்ஸ் லிமிடெட் என்ற நிறுவனம் துவக்கப்பட உள்ளது.

இவ்வாறு சிதம்பரம் கூறினார்.

# ஏல விற்பனை

1. Choudhary 23, Narayanappan Naickenst, Madras-21 *(1-11-81 முதல் 30-9-84 முடிய)* ஏலத்தேதி 7-3-86

2. H. G. Gouthamchand 50, N. P. Koil street, Madras-1 *(1-6-84 முதல் 25-11-84 முடிய)* ஏலத் தேதி 7-3-86

3. B. S. Bhawarlal Jain, 491, P. H. Road, Madras-106 *(1-2-84 முதல், 30-12-84 முடிய)* ஏலத் தேதி 11-3-86

4. B. Prakashchand Jain 491, P. H. Road, Madras-106 *(1-7-84 முதல் 31-12-84 முடிய)* ஏலத் தேதி 11-3-86

5. H. G. Nemichand, 121, Annapillai street, Madras-79 *(1-1-84 முதல் 30-7-84 முடிய)* ஏலத்தேதி 12-3-86

6. G. NathmalJain, 160, 1st Street, Netaji Nagar, Madras-81 *(25-12-81 முதல் 20-9-84 முடிய)* ஏலத்தேதி 12-3-86

7. M. Jawarilal Jain 37, Ranganathan chetty Road, Madras-34 *(20-8-83 முதல் 30-9-84 முடிய)* ஏலத் தேதி 14-3-86

8. P. Suganchand, 191 V. M. Street, Madras-14 *(4-5-83 முதல் 25-10-84 முடிய)* ஏலத்தேதி14-3-86

9. S. Prakashchand Jain 191, V. M. Street, Madras-14 *(15-5-81 முதல் 31-10-84 முடிய)* ஏலத் தேதி 14-3-86

10. G. Prakashchand & Co, 22, East Kalamandapam Road, Madras-13 *(25-5-84 முதல் 30-12-84 முடிய)* ஏலத்தேதி 14-3-86

மேற்படி கடைகளில் அடகு வைத்து மீட்கப்படாத பொருட்களை மேற்படி தேதிகளில் வருவாய்த்துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு ஏலதாரர்களான எம். ஜவஹர்லால்போரா அவர்களால் 31, மங்கபதி நாயக்கன் தெரு. சிந்தாரிப்பேட்டை. சென்னை—2 விலாசத்தில் ஏலம் போடப்படும்.

# ஜெயவர்த்தனேக்கு இந்தியா கண்டனம்

## தீட்சித்திற்கு மத்திய அரசு அவசர அழைப்பு

**கொழும்பு, பிப். 26- இலங்கையில் தமிழர்களுக்கு எதிராக சிங்களராணுவம் அராஜகம் நடத்தி வருவதற்கு இந்தியா கடும் கண்டனம் தெரிவித்து உள்ளது.**

இலங்கையில் தமிழர்களை சிங்கள ராணுவம் வேட்டையாடி வருகிறது அல்லவா?

ஈழ தமிழர்பிரச்சினைக்கு விரைவில் தீர்வு ஏற்பட இந்தியா அக்கறை கொண்டுள்ளது. இதற்காக இலங்கையிலுள்ள இந்தியத்தூதர் தீட்சித்தை மத்திய அரசு அவசரமாக அழைத்துள்ளது.

மத்திய அரசின் ஆணைப்படி தீட்சித் நேற்று இந்தியாவுக்கு திரும்புமுன் இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேயைச்சந்தித்துப் பேசினார்.

இலங்கைத் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவது தொடர்பாக ஜெயவர்த்தனேயிடம் இந்தியாவின் கண்டனத்தை தீட்சித் தெரிவித்தார்.

பிரதமர் ராஜீவிடம் கொடுப்பதற்காக ஒரு கடிதத்தை தீட்சித்திடம் ஜெயவர்த்தனே கொடுத்து அனுப்பியுள்ளார்.

இலங்கைத்தமிழர் பிரச்சினையில், அரசியல் ரீதியாக அமைதியான தீர்வு காணவே தமது அரசு விரும்புவதாக இந்தியத் தூதர் தீட்சித்திடம் ஜெயவர்த்தனே கூறினார்.

தீட்சித் இன்று டெல்லி வந்து ஆலோசனை நடத்துகிறார். ஜெயவர்த்தனேயின் கடிதத்தை பிரதமரிடம் தீட்சித கொடுக்கிறார்.

### நிரந்தர சேனை

இலங்கையில் ஒரு லட்சம் பேர் கொண்ட நிரந்த சேனையைஅமைக்க ஜெயவர்த்தனே திட்டமிட்டுள்ளதாகத் தெரிகிறது.

இவர்களில் பலர் பாகிஸ்தான் ராணுவ அதிகாரிகளிடம் பயிற்சி பெற்றவர்கள்.

## திருப்பூர் நகராட்சியை கழகம் கைப்பற்றியது

திருப்பூர், பிப். 26— திருப்பூர் நகராட்சியை கழகம் கைப்பற்றியுள்ளது. வாக்கு விவரம் வருமாறு:-

| | | |
|---|---|---|
| மொத்தவாக்குகள் | | 1,18.243 |
| பதிவான வாக்குகள் | | 65831 |
| நா. கந்தசாமி | கழகம் | 22787 |
| மு. நா. பழனிச்சாமி | சுயே | 19795 |
| சுப்ரமணியம் | தி.மு.க. | 18700 |
| துரைசாமி | சுயே | 309 |
| முத்துசாமி | சுயே | 209 |
| ச. முருகேசன் | (சுயே) | 124 |
| எம். ஜி. பி. ரத்தினசாமி | (சுயே) | 97 |
| சி சுப்ரமணி | (சுயே) | 61 |
| ஏ. வரதராஜன் | (சுயே) | 49 |
| மு. சிதம்பரம் | (சுயே) | 48 |

## குஜராத் கவர்னராக திரிவேதி

புதுடெல்லி. பிப். 26— குஜராத் மாநில கவர்னராக முன்னாள் தேர்தல் கமிஷனர் ஆர்.கே.திரிவேதி நியமிக்கப் பட்டுள்ளார். ஆர்.கே. திரிவேதி என்று தனது பொறுப்பை ஏற்கிறாரோ அன்று முதல் அவர் பதவிக்காலம் அமலுக்கு வருமென்று ஜனாதிபதி மாளிகை செய்தி தெரிவிக்கிறது.

## பலே ஆசாமி கைது

திருப்பதி, பிப். 26— தமிழ்நாடு, ஆந்திரா ஆகிய மாநிலங்களில் கொள்ளையடித்து வந்த பலே ஆசாமியை போலீசார் கைது செய்துள்ளனர்.

இருபத்திஐந்து வயதான இந்த இளைஞர் ஏற்கனவே பலமுறை சிறைசென்றவர். இவரை போலீசார்பிடித்து அவரிடமிருந்த 50 ஆயிரம் ரூபாய்மதிப்புள்ள பொருட்களை கைப்பற்றினர்.

# பாகிஸ்தானின் இரட்டை வேடம்: பகத் கண்டனம்

புதுடெல்லி, பிப். 26— இந்தியாவுடன் நட்புறவை வளர்ப்போம் என்று பேசிவரும் பாகிஸ்தான் பஞ்சாபில் பயங்கரவாதிகளுக்குஊக்கமளித்து வருகிறது. என்று மத்திய வெளிவிவகார அமைச்சர் பி. ஆர். பகத் கடும் கண்டனம் தெரிவித்தார்.

நாடாளுமன்றத்தில் கொண்டு வரப்பட்ட ஒரு கவன ஈர்ப்புத் தீர்மானத்துக்கு விளக்கம் அளித்த மத்திய வெளிவிவகார அமைச்சர் பி. ஆர். பகத் பாகிஸ்தானை கடுமையாக விமர்சித்தார்.

அனாவசியமாக இந்திய உள்நாட்டுவிவகாரங்களில் பாகிஸ்தான் தலையிட்டு வருகிறது என்றும் அவர் கூறினார்.

அமைச்சர் மேலும் குறிப்பிட்டதாவது:-

இந்தியாவுடன் வர்த்தக உறவுகளை பலப்படுத்திக் கொள்ளப் போவதாகவும் தொழில் நுட்ப நிபுணர்களை இருநாடுகளும் பரிவர்த்தனை செய்து கொள்ளவேண்டும்என்றும் பாகிஸ்தான் சொல்லி வருகிறது.

அதிபர் ஜியாவுல்அக்கும் இதை வலியுறுத்தியிருக்கிறார்.

ஆனால் பாகிஸ்தானின் போக்கு இதை ஊர்ஜிதம் செய்வதாக இல்லை இந்தியாவின் உள்நாட்டு விவகாரத்தில் அது தலையிட்டு வருகிறது.

சீக்கிய தீவிரவாதிகளை தூண்டிவிட்டு பஞ்சாபில் கலவரத்தை ஏற்படுத்தி வருகிறது. சீக்கிய தீவிரவாதிகளுக்கு பயிற்சி அளிக்கிறது.

சீக்கிய தீவிரவாதிகளுக்கு பாகிஸ்தானில் தங்குவதற்கும் இந்தியாவுக்கு விரோதமான நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கும் அதுதிட்டமிட்டு செயல்படுகிறது.

இந்தியாவில் சிறுபான்மையினர் அவதிப் படுகிறார்கள் என்று வேண்டுமென்றே பிரச்சாரம் செய்கிறது.

இப்படி இரட்டைவேடம் போடும் பாகிஸ்தானை இந்தியா பலமுறை எச்சரித்திருக்கிறது. பாகிஸ்தான் தொடர்ந்து இந்தியாவுக்கு எதிரான நடவடிக்கைகளில்ஈடுபட்டு வருவதால்தான் அதனுடன் சமாதான பேச்சுவார்த்தை நடத்துவது கடினமாக இருக்கிறது.

இதனால்தான்பிரதமரின் பாகிஸ்தான் பயணமும் ரத்துசெய்யப்பட்டுவிட்டது ஏனென்றால் பிரதமரின் பயணத்துக்கு முன்னதாக நிறைவேற்றப் பட வேண்டியகாரியங்கள் அதிகம் உள்ளன.

பாகிஸ்தானில் உள்ள மக்கள் பலர் இந்திய மக்களுடன் தொடர்பும்-உறவும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இதை பாகிஸ்தான் நன்கு உணர வேண்டும். அப்போதுதான் இருநாடுகளுக்கிடையே கலாச்சாரம், பண்பு. மற்றும் இதர நட்புறவுகள் வளரவாய்ப்பு ஏற்படும்.

இவ்வாறு அமைச்சர் பகத் கூறினார்.

## ஓ.எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு ஆரம்பம்

சென்னை, பிப். 26- ஓ.எஸ்.எஸ்எல்.சி.ஏப்ரல் 1.5, 8 ஆகிய தேதிகளில் முதன்மை மொழி மூன்று தாள்களுக்கான தேர்வுகள் நடைபெறும்.

தனித்தேர்வர்கள் (பிரைவேட் கேன்டிடேட்ஸ்) தங்கள் விண்ணப்பத்தில் குறிப்பிட்டிருந்த தேர்வுக்கூட நுழைவுச்சீட்டு வினியோக மையங்களில், தேர்வு தொடங்குவதற்கு மூன்று நாட்களுக்கு முன்னதாகச் சென்று நேரில் பெற்றுக் கொள்ள வேண்டும்.

# பிலிப்பைன்ஸ்ஜனாதிபதி திருமதி அக்கினோவுக்கு இந்தியா ஆதரவு

மணிலா, பிப். 26— 20 ஆண்டு காலம் சர்வாதிகார ஆட்சி நடத்திய மார்க்கோஸ் அமெரிக்காவிற்கு தப்பி ஓடிவிட்டார். புதிய ஜனாதிபதியாகபொறுப்பேற்றுள்ள அக்கினோ அரசுக்கு இந்தியா ஆதரவு தெரிவித்துள்ளது.

பிலிப்பைன்ஸ் நாட்டு ஜனாதிபதியாக மார்க்கோஸ் 20 ஆண்டு காலம் சர்வாதிகார ஆட்சி நடத்தினார்.

கடந்த 7-ந்தேதி பிலிப்பைன்ஸ் நாட்டில் நடந்த தேர்தலில் திருமதி அக்கினோ பெரும் வெற்றி பெற்றார்.

ஆனால் மார்க்கோஸ் தோல்வியை ஒப்புக்கொள்ளவில்லை. தான்தான் ஜனாதிபதி என அறிவித்துக் கொண்டார்.

இதையடுத்து பிலிப்பைன்ஸ் நாட்டில் பெரும் கலவரம் ஏற்பட்டது.அக்கினோவிற்கு மக்கள் பேராதரவு தந்தனர்.

மார்க்கோஸ் ஆதரவு ராணுவத்தினருக்கும் அக்கினோவின் ஆதரவாளர் களுக்குமிடையே கடும் மோதல் ஏற்பட்டது.

அக்கினோவிற்கு ஆதரவு தெரிவித்த நாடாளுமன்ற உறுப்பினர்கள் அக்கினோவை ஜனாதிபதியாக அறிவித்தனர். அவரும் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்.

இறுதிவரை பதவி விலக மாட்டேன் என்று பிடிவாதம் பிடித்த மார்க்கோஸ் நேற்று அமெரிக்காவிற்கு தப்பி ஓடினார்.

அமெரிக்க போர் விமானம் ஒன்றில் மார்க்கோசும் அவரது குடும்பத்தினரும் தப்பிச் சென்றனர்.

### அமெரிக்கா அங்கீகரித்து

திருமதி அக்கினோ அரசுக்கு அமெரிக்க அங்கீகாரம் அளிந்துள்ளது.

அக்கினோவிற்கு வாழ்த்து தெரிவித்து வெள்ளை மாளிகையில் இருந்து செய்தி அனுப்பப்பட்டது

முன்னதாக நடந்த கலவரங்களில் 12 பேர் கொல்லப் பட்டனர்.

மார்க்கோஸ் வசித்த மாளிகையில் சுமார் 5ஆயிரம் பேர் சுற்றிவளைத்து முற்றுகை இட்டு அங்கிருந்த மேஜை நாற்காலிகளை எல்லாம் உடைத்தனர். தஸ்தாவேஜுகளைகிழித்து எறிந்தனர்.

திருமதி அக்கினோவின் அரசுக்கு இந்தியா ஆதரவு தெரிவித்துள்ளது.

20ஆண்டுக்கால சர்வாதிகார ஆட்சியை அகற்றிய அக்கினோவிற்கு 53 வயதாகிறது.

அக்கினோ சிறந்தமேடை பேச்சாளர் ஆவார்

தேர்தலுக்கு முன்பு நாடு முழுக்க சுற்றி மார்க்கோசை எதிர்த்து தீவிர பிரச்சாரம் செய்தார்.

### அமெரிக்கா காட்டிய ஆர்வம்

பிலிப்பைன்ஸ் நாட்டு அரசோடு அமெரிக்கா நெருங்கிய தொடர்புகொண்டிருந்தது பிலிப்பைஸ்ன் நாட்டில் அமெரிக்காவிற்கு சுபிக் என்றஇடத்தில் கடற்படை தளம் உள்ளது.

அதே போல் கிளர்க் என்ற இடத்தில் விமானப் படைத்தளமும் உள்ளது.

அமெரிக்கஆதரவாளராக திகழ்ந்த மார்க்கோஸ் பிலிப்பைன்ஸில் அமெரிக்கா ராணுவ தளம் அமைக்க அனுமதி வழங்கினார்.

தற்போது திருமதி அக்கினோ அமெரிக்க ராணுவத் தளங்கள் தொடர்ந்து இருக்க அனுமதிப்பாரா என்பது பிறகு தான் தெரியும்.

தேர்தல் பிரச்சாரத்தின் போது 1991-ம் ஆண்டு வரைதான் அமெரிக்கதளங்கள் பிலிப்பைன்ஸ் நாட்டில் இருக்க அனுமதிக்கப் படும் என அக்கினோ கூறியிருந்தார்.

பிலிப்பைன்ஸ் நாட்டுச் சட்டங்கள், நடைமுறைக்கு ஏற்றதல்ல என்றும் அக்கினோ கூறியிருந்தார்.

இதனால் அந்நாட்டு சட்டங்கள் திருத்தப்படும் என தெரிகிறது.

வன்முறையை கைவிட்டால்கம்யூனிஸ்டுகளோடும் ஒத்துழைக்க தயார்எனவும் அக்கினோ கூறியிருந்தார்.

கடந்த ஒரு மாதத்தில் அமெரிக்க ஆதரவுதலைவர்கள் இருவர் தங்கள் பதவிகளை இழந்து அமெரிக்காவிற்கு ஓடிவந்துள்ளனர்.

தென் அமெரிக்காவைச் சேர்ந்த ஹைட்டி நாட்டு ஜனாதிபதியும், பதவியை இழந்து அமெரிக்காவிற்கு ஓடி வந்துவிட்டார்.

## மேல்மருவத்தூர்: புதிய ரயில் நிலையம்

சென்னை, பிப். 26— சோத்துப்பாக்கத்துக்கும் அச்சரப்பாக்கத்துக்கும் இடையே உள்ள மேல் மருவத்தூரில் புதிய ரயில் நிலையம் நாளை (வியாழன்) திறக்கப்படுகிறது

சென்னை- ராமேஸ்வரம் பாசஞ்சர் ரயில் இங்கு ஒரு நிமிடம் நிற்கும். மார்ச் 1ந் தேதியிலிருந்து இந்தபுதிய ரயில் நிலையத்தில் நின்று செல்லும்.

விழுப்புரம் - செங்கற்பட்டு பாதையில் உள்ள பாலங்கள் பழுது அடைந்திருப்பதால் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த விழுப்புரம் பாசஞ்சர் இனி தாம்பரத்திற்கும்- விழுப்புரத்திற்கும் இடையே] மார்ச் முதல் தேதியிலிருந்து ஓடும் என்று தென்னக ரயில்வே தெரிவித்துள்ளது.

## விடுதலைப்புலிகள் சுட்டு 18 இலங்கை ராணுவத்தினர் சாவு

கொழும்பு, பிப். 26— இலங்கை ராணுவத்துக்கும் விடுதலைப்புலிகளுக்கும் இடையே நடந்த துப்பாக்கி சண்டையில் 18 ராணுவத்தினர்கொல்லப்பட்டனர்.

இலங்கையில் சிங்கள ராணுவத்தினா அப்பாவித் தமிழர்களை படுகொலை செய்து வருகின்றனர். இதனால் இலங்கை ராணுவத்துக்குப் பதிலடி கொடுக்கும் வகையில் விடுதலைப்புலிகள் ராணுவத்தைத் தாக்கி உள்ளனர்

இதைத்தொடர்ந்து மன்னார் மாவட்டத்தில் தெள்ளடி கிராமத்தில் இருதரயபினருக்கும் இடைபே மோதல் நடந்தது. அதைத் தொடர்ந்து துப்பாக்கிச் சண்டையும் நடைபெற்றது.

அப்பாவித் தமிழர்களை தாக்குவதற்காக சிங்கள ராணுவத்தினர் ஜீப்களில் வந்தபோது இந்த மோதல் நடந்தது. இந்த மோதலில் சிங்கள ராணுவத்தினர் 18 பேர் கொல்லப்பட்டனர். ராணுவத்தின் இரு ஜீப்புகளும் சேதப்படுத்தப்பட்டன.

யாழ்ப்பாணம்மாவட்டம் பூநகரி என்ற இடத்தில் நடந்த இன்னொரு மோதலில் விடுதலைப்புலிகள் வெடிகுண்டுகளைவீசியதில் 8 இலங்கை ராணுவத்தினர் கொல்லப்பட்டனர். பத்து பேர் காயம் அடைந்தனர்

## தமிழ் அறிஞர் பரந்தாமனார் இறுதி ஊர்வலம்

சென்னை, பிப். 26— பைந்தமிழ்ப் பாவலர் என்று புகழப்பட்ட அ. கி. பரந்தாமனார் சென்னை புரசைவாக்கத்திலுள்ள அவரது வீட்டில் மரணமடைந்தார் அவருக்கு வயது 74 அவரது உடல் அடக்கம் நேற்று மாலை ஓட்டேரி சுடுகாட்டில் நடைபெற்றது. அவருக்கு கணேசம்மாள் என்ற மனைவியும், சோமசுந்தரம் என்ற மகனும் உள்ளனர்.

## கோடம்பாக்கம் குமார் டெல்லிபயணம்

சென்னை, பிப். 26— தமிழ்நாட்டு பாடநூல் நிறுவன மேலாண்மை இயக்குனர் கோடம்பாக்கம் எம் குமார் வரும் 3-ந் தேதியன்று டெல்லி செல்கிறார்.

4,5 ஆகிய தேதிகளில் மத்திய தொழில்அமைச்சர் மற்றும் அதிகாரிகளைச் சந்தித்து நோட்டு புத்தகங்களின் விலைகுறித்து பேசுகிறார். புதிய அச்சு இயந்திரம் வாங்குவது குறித்தும் பேச்சு நடத்துகிறார். 6ந் தேதியன்று சென்னை வந்தடைகிறார்.

# விவாகரத்து: முஸ்லிம் பெண்கள்பாதுகாப்புக்கு புதிய சட்டம்

புதுடெல்லி. பிப். 26- கணவனால் விவாகரத்து செய்யப்படும் முஸ்லிம் பெண்களுக்கு பாதுகாப்புவழங்க வகை செய்யும் புதியசட்டம்நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.

இந்தியாவில் பொதுவாக நடை முறையிலுள்ள சட்டவிதிகளின் படி ஒரு கணவன் தன் மனைவியை விவாகரத்து செய்தால் மனைவிக்கும், குழந்தைக்கும் மாதந்தோறும் ஜீவனாம்சப் பணம் தரவேண்டும். ஆனால் இந்த சட்டம் முஸ்லிம் சமுதாயத்தில் கடைபிடிக்கப்படவில்லை. ஒரு முஸ்லிம் பெண் கணவனால் கைவிடப்பட்டால் அல்லது விவாகரத்து செய்யப்பட்டால் மூன்று மாத காலத்திற்கு மட்டும் ஜீவனாம்சம் தந்தால் போதும்.

முஸ்லிம் பெண்களுக்கும் மற்ற பெண்களுக்கு வழங்கப்படுவதுபோல் ஜீவனாம்சம் வழங்கப்படவேண்டுமென்ற கோரிக்கை நாடெங்கும் எழுந்தது. முஸ்லிம் பெண்கள் பலர் இது குறித்து பிரதமர் உள்ளிட்ட பலரை சந்தித்து வலியுறுத்தினர்.

இதன் அடிப்படையில் இப்போது புதிய சட்டம் தாக்கல் செய்யப்பட்டுள்ளது.

இதற்கான சட்ட மசோதாவை மத்திய சட்ட அமைச்சர் ஏ. கே. சென் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்தார். பெரும்பாலான முஸ்லிம்களின் கருத்துக்களை பிரதிபலிக்கும் வகையில் இந்த சட்டம்கொண்டுவரப்பட்டுள்ளதாக சென் கூறினார்.

புதியசட்டத்துக்குஜனதா பாரதீய ஜனதா, இருகம்யூனிஸ்டுகட்சிகள்உள்ளிட்ட பலர் எதிர்ப்பு தெரிவித்துள்ளனர். இதற்கு பொது மக்களின் கருத்தை திரட்ட வேண்டுமென்றும் கோரினர்.

இதற்கு பதிலளிக்கும் வகையில் பிரதமர் ராஜீவ் கூறியதாவது:—

இந்த சட்டம் பற்றி உறுப்பினர்கள் தங்கள் கருத்தை தாராளமாக தெரிவிக்கலாம். அதுபற்றி அரசு பரிசீலிக்கும். எதிர்க்கட்சிகளை கலந்து பேசாமல் வெறும் அவசரத்தில் இந்த சட்டம் தாக்கல் செய்யவில்லை. இதுபற்றி ஆலோசனை நடத்த எதிர்கட்சித் தலைவர்களுக்கு மத்திய அரசு விடுத்த அழைப்பை அவர்கள் ஏற்கவில்லை.

முஸ்லிம் அறிஞர்கள் பல்வேறு அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளுடன் கலந்து ஆலோசனை நடத்திய பிறகே இந்த மசோதா தயாரானது.

இவ்வாறு பிரதமர் கூறினார்.

புதிய சட்டம் தாக்கல் செய்வதை எதிர்த்து நாடாளுமன்றத்துக்கு வெளியே ஆர்ப்பாட்டம் செய்த 170 பெண்களை போலீசார் கைது செய்தனர்.

## இந்தியாவில் முதலீடு: வெளிநாட்டினர் காட்டும் பேரார்வம்

புதுடெல்லி, பிப். 26- இந்தியாவில் தொழில் தொடங்க வெளி நாட்டினர் பேரார்வம் காட்டுகிறார்கள்.

இந்தியாவில் தொழில் தொடங்க பல்வேறு வெளிநாடுகளைச் சேர்ந்தவர்கள் முதலீடு செய்து வருகின்றனர்.

1984-ம் ஆண்டில் வெளிநாட்டினர் ஒத்துழைப்போடு 752 தொழில்கள் தொடங்க அனுமதி வழங்கப்பட்டது.

1985-ல்இது1024ஆக அதிகரித்தது.

1982-ல் இந்தியாவில் வெளிநாட்டினரின்முதலீடு 62 கோடியே 80 லட்ச ரூபாயாக இருந்தது. இது 1985ம் ஆண்டில் 125 கோடியே 86 லட்ச ரூபாயாக இருந்தது.

இந்தியாவில் முதலீடு செய்வதில் அமெரிக்கா முதலிடம் வகிக்கிறது.

வெளிநாட்டில் வசிக்கும் இந்தியர்கள் 1985-ம் ஆண்டில் 52 திட்டங்களுக்காக, 19 கோடி ரூபாய் முதலீடு செய்துள்ளனர்.

## எஸ் எஸ். எல். சி. தேர்வுகள்

சென்னை, பிப். 26— தமிழ்நாட்டில் எஸ்.எஸ். எல். சி. (பத்தாம் வகுப்பு) தேர்வுகள் மார்ச் 31—ந் தேதி முதல் ஏப்ரல் 9—ந் தேதி வரை நடைபெற உள்ளது.

இதுபற்றிய குறிப்பைத் தேர்வுத்துறை வெளியிட்டுள்ளது.

மார்ச் 31 ஏப்ரல்1ஆகிய நாட்களில் தமிழ் முதல் மற்றும் இரண்டாம் தாள்களுக்குத் தேர்வு நடைபெறும். ஏப்ரல் 2. 3ஆகிய தேதிகளில்ஆங்கிலம் முதல் மற்றும் இரண்டாம் தாள்களுக்குத் தேர்வு நடைபெறும்,

## சிகிச்சை பெற்றும் 5 மாதமாக நினைவுதிரும்பாமல் பெண்மரணம்

திருப்பதி, பிப், 26— கடந்த 5 மாதமாக சுய நினைவு இல்லாமலிருந்த ஒரு பெண் நினைவுதிரும்பாமலே மரணமடைந்தார் சந்திரகிரியைச்சேர்ந்த ஆந்திர போக்குவரத்துக் கழக ஊழியர் ஒருவரின் மனைவி சரஸ்வதி,

இவர் மரணமடைவதற்கு திருப்பதியில் உள்ள ஒரு தனியார் மருத்துவமனையின் டாக்டர்களுடைய தவறான சிகிச்சை தான் காரணம் என்று பெண்ணின் உறவினர்கள் தெரிவித்துள்ளனர்.

ஆனால் 'கோமா'வில் இது ஒரு அபூர்வமான கேஸ் என்றும் தவறான சிகிச்சைகளினால் அந்த பெண்ணுக்கு இந்த கதி ஏற்படவில்லை என்றும் டாக்டர்கள் கூறுகின்றனர்

Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34 Nelson M[illegible]m Road MADRAS [illegible]029.


# பெட்ரோல் விலையை உயர்த்தியது ஏன்? பிரதமர் ராஜீவ் பேட்டி

பம்பாய், பிப். 26— நாட்டின் அன்னியசெலாவணியை பெருக்குவதற்கும், வர்த்தக ரீதியில் ஏற்பட்டுவரும் இடைவெளியை குறைக்கவும் பெட்ரோலிய பொருட்களின் விலை உயர்த்தப்பட்டது என்று பிரதமர் ராஜீவ் கூறினார்.

பிரதமர் ராஜீவ் காந்தி பம்பாய் பத்திரிகை ஒன்றுக்கு அளித்த பேட்டியில் கூறியிருப்பதாவது:

சர்வ தேச நிதிக்கழகத்துக்கு இந்தியா தனது கடன் பாக்கியை திருப்பி அளிக்க வேண்டியுள்ளது. தவிர நாட்டின் அன்னிய செலாவணியை அதிகரிப்பதும் முக்கியத்வம் வாய்ந்தது அன்னிய செலாவணியை நாம் பெருக்கி அதை பாதுகாத்து வைக்க வேண்டும்.

இந்த நிலையில் தான் பெட்ரோலியப் பொருட்களின் விலை உயர்த்தப்பட்டது அதனால் எந்தவிதமான பாதிப்பும் ஏற்படுவதற்கில்லை.

நாட்டின் பொருளாதாரம் சீரான முறையில் இருக்க வேண்டும். இதை கருத்தில் கொண்டு தான் அத்தியாவசியப் பண்டங்களின் விலை உயர்த்தப்பட்டது.

உரப் பொருள்கள், சமையல் எண்ணெய், சர்க்கரை போன்ற பொருட்களை நாம்இறக்குமதி செய்யும் போது அதற்காக அன்னியச்செலாவணி தேவைப்படுகிறது. அன்னிய செலாவணியை அதிகரிக்கும்வகையில்பெட்ரோலியப் பொருட்களின்விலை உயர்த்தப்பட்டது.

பஞ்சாப் ஒப்பந்தத்தால் பஞ்சாப் மாநிலத்திலுள்ள எல்லா பிரச்சினைகளும் அடியோடு தீர்ந்து விட்டது என்று சொல்வதற்கில்லை.

பஞ்சாப் மாநிலபிரச்சினைகளை தீர்ப்பதற்கு இந்த ஒப்பந்தம் ஒரு துவக்கமாக இருக்கிறது.

தீவிரவாதிகளின் கொட்டத்தை அடக்க பஞ்சாப் மாநில அரசு கடுமையான நடவடிக்கைகளை எடுக்கும்.

பயங்கரவாதிகளை உடனடியாக ஒழித்துக் கட்ட முடியாது. ஆனாலும் அவர்கள் அறவே தீர்த்துக் கட்டப்படுவார்கள் இது உறுதி. அந்த வேலைகள் படிப்படியாக நடக்கும் முதல் அமைச்சர் பர்னாலா அதற்கான நடவடிக்கைகளைமேற்கொண்டுள்ளார்

பொருட்கள் விலை உயர்வை எதிர்த்து நடந்த போராட்டத்தில் சில காங்கிரஸ்காரர்களும் எதிர்க்கட்சிகளுடன் சேர்ந்து விட்டார்கள் என்று சொல்லுவது தவறு

## தேசிய அமைப்பு

ஜனநாயக அடிப்படையில் சில கருத்துக்களை ஆளும் கட்சியினர் வெளியிடுவது தவிர்க்க முடியாதது. பயங்கரவாதிகளை ஒழித்துக் கட்டும் வேலையில் பொது மக்களுக்கும் பாதகம் ஏற்படாமல் பார்க்கவேண்டும். தீர யோசித்துத்தான் அரசு அவ்வப்போது நடவடிக்கைகளை மேற் கொண்டு வருகிறது.

பொற்கோயில் வளாகத்தில் வன்முறை சம்பவங்கள் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுவது சம்பந்தப்பட்ட ஒவ்வொருவரின் கடமையாகும்.

பொற்கோவிலுக்குள் ராணுவத்தை மீண்டும் அனுப்பி நடவடிக்கைகளை மேற்கொள்வதால் பயன் ஒன்றும் ஏற்பட்டு விடாது ஆகவே மீண்டும் ராணுவ நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளாது.

மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் தரவேண்டும என்றபிரச்சினைஅனைத்து கட்சியினரும் ஆலோசித்து முடிவு செய்யவேண்டியது பிரச்சினை ஆகும்

ஒரு தேசிய அமைப்பு நம்மிடையே உருவாக்கப் பட வேண்டும். நாட்டில் ஏற்படும் பெரும் பிரச்சினைகள் குறித்து எதிர்க் கட்சித் தலைவர்களுடன் தொடர்ந்து பேசி தீர்மானிப்பதையே நான் விரும்புகிறேன்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் கூறினார்.

# வங்கி அதிகாரிகள் வீட்டில் 1.ரூ கோடி கருப்புபணம்

புதுடெல்லி, பிப், 26— வங்கி அதிகாரிகள் வீடுகளிலும் சொந்த அலுவலகங்களிலும் புலனாய்வுதுறை அதிகாரிகள் நடத்திய சோதனையில் ஒருகோடி ரூபாய் மதிப்புள்ள கறுப்புப்பணம் கைப்பற்றப்பட்டுள்ளதாக மாநிலங்களவையில் தெரிவிக்கப்பட்டது.

மாநிலங்களவையில் பீஷ்மகோஸ்வாமி. எஸ். பி. மாளவியா ஆகியோரின் கேள்விக்கு பதிலளித்து மத்திய நிதி அமைச்சர் வி.பி.சிங் பேசுகையில் மேற்கண்ட தகவல்களைத் தெரிவித்தார்.

வங்கிக்கடன் வழங்குவதில் தற்போதுள்ள நடைமுறைகளை மாற்றுவது குறித்தும்அரசு ஆலோசித்து வருகிறது. பொதுத்துறையிலுள்ள வங்கிகள் கடன் வழங்குவதில் நடந்த மோசடி குறித்து 65 புகார்கள்பதிவு செய்யப்பட்டுள்ளதாகவும் வி.பி.சிங்.கூறினார்.



# கேரளாவில் தேர்தல் எப்போது? முதல்வர் கருணாகரன் அறிவிப்பு

திருவனந்தபுரம், பிப். 26- கேரள மாநில சட்ட சபைக்கு தேர்தல்எப்போது நடக்கும் என்ற கேள்விக்கு முதல் அமைச்சர் கருணாகரன் பதில் அளித்தார்.

கருணாகரன் தலைமையிலான கூட்டு மந்திரிசபை கேரள மாநிலத்தில்ஆட்சிப் பொறுப்பில் இருக்கிறது.

அமைச்சர்களிடையே கருத்து வேற்றுமை அதிகரித்து விட்டது.

## சட்டசபை கலைப்பு

கடந்த3 ஆண்டு 9 மாதமாக நடந்து வரும் ஐக்கிய ஜனநாயக முன்னணி மந்திரிசபைநிலைத்து நிற்குமா என்பது சந்தேகமாகவே இருக்கிறது.

இந்த நிலையில் சட்டசபையை கலைத்து விட்டு மீண்டும் தேர்தல் நடத்த முதல் அமைச்சர் கருணாகரன் திட்டமிட்டு வருகிறார். ஆனால் இந்திரா காங்கிரஸ் மேலிடம்இதற்கு அனுமதி அளிக்கவில்லை.

இதைத் தொடர்ந்து கருணாகரன் புதுடெல்லியில் காங்கிரஸ் மேலிடத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்தினார்.

நேற்று புதுடெல்லியில் இருந்து திருவனந்தபுரம் திரும்பிய கருணாகரன் நிருபர்களிடையே பேசினார்.

## தேர்தல் எப்போது ?

கேரளமாநில சட்டசபை எப்போது கலைக்கப்படும்? மீண்டும் தேர்தல் எப்போது? இப்படி பல்வேறுக் கேள்விக்கணைகளை நிருபர்கள் தொடுத்தனர்.

அதற்குப் பதிலளித்து முதல் அமைச்சர் கருணாகரன் கூறியதாவது:—

கேரள மந்திரி சபையின் இறுதிக்காலம் நெருங்கி கொண்டிருக்கிறது. அது பற்றிய முடிவு அடுத்த மாதம் (மார்ச்சு) முதல் வாரத்தில் அறிவிக்கப்படும் மந்திரிசபையை கலைத்து விடுவதா அல்லது தற்போதுள்ள மந்திரிசபையை மாற்றி அமைப்பதா என்பது இன்னும் முடிவாகவில்லை.

இருந்தாலும் அதுபற்றிய திட்டவட்டமான அறிவிப்பு அடுத்த மாதம் முதல்வாரத்திலேயே தெரிவிக்கப்படும்.

இவ்வாறு கருணாகரன் கூறினார்.

# கலவரம்: துப்பாக்கி சூடு: ஒருவர் மரணம்

லக்னோ, பிப். 26— உத்தரபிரதேசம் பாஸ்தி மாவட்டத்தில் தும்ரியாகஞ்ச் என்ற இடத்தில் இந்துக்கள் அடங்கிய கூட்டத்தில் வன்முறை ஏற்பட்டது. போலீசார் துப்பாக்கியால் சுட்டதில் ஒருவர் இறந்தார்.

அங்கு ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது.

# விடுதலைப்புலிகள் கருத்து வேற்றுமை நீங்கி ஒற்றுமை

கொழும்பு, பிப். 26- இலங்கையில் இரண்டு விடுதலைப்புலிகள் அமைப்புகளுக்கிடையே இருந்ததகராறுதீர்ந்தது. அந்த இரண்டு அமைப்புகளும் ஒற்றுமையாயின

இலங்கையில் தனிஈழம் கேட்டு போராடும் விடுதலைப்புலிகள் பல்வேறு அமைப்புகளாக இருந்து போராடி வருகிறார்கள்.

இதில் ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணியினரும், தமிழ் ஈழ விடுதலை முன்னணினரும் ஒற்றுமைஇல்லாமல் இருந்து வந்தனர்.

இரு அமைப்பினருக்கும் இடையே கடந்த வாரம் பயங்கர மோதல் ஏற்பட்டது.

இரு கோஷ்டியினரும் தெருவில் நின்று துப்பாக்கியால் சுட்டு சண்டை போட்டுக் கொண்டனர். இதில் ஈழ மக்கள் புரட்சிகர விடுதலை முன்னணி உறுப்பினர்கள் 7 பேர் இறந்து போனார்கள்.

ஒரே கொள்கைக்காக உயிர்த் தியாகம் செய்து போராடும் விடுதலைப்புலிகள் இப்படி தங்களுக்குள் மோதிக் கொள்வதைத் தடுக்க அந்தப்பகுதி தலைவர்கள் இரு தரப்பினரையும் அழைத்துப்பேசினர்.

அப்போது இரு தரப்பினரும் தங்கள் தகராறைக் கைவிட்டு சமாதானமாக ஒற்றுமையாக இருக்க சம்மதித்தனர். ஒருவரை ஒருவர் தாக்குவதில்லை என்று அவர்கள் ஒப்புக் கொண்டனர்.

# வாக்குரிமை வயதுகுறைப்பு இல்லை: மத்திய அரசு அறிவிப்பு

புதுடெல்லி, பிப். 26— வாக்களிக்கும் உரிமையை 18 வயதில் இருந்து குறைக்கும் உத்தேசம் ஏதும் அரசுக்கு இல்லை என மக்கள் சபையில் சட்டத்துறை இணை அமைச்சர் பரத்வார் தெரிவித்துள்ளார்.

கேள்விஒன்றுக்கு எழுத்து மூலம் அளித்த பதிலில் அமைச்சர்மேற்கண்டவாறு கூறினார்.

தேர்தல் செலவை மாநில அரசுகளும் பகிர்ந்து கொள்ளலாம் என்ற தேர்தல் கமிஷன் யோசனை குறித்தும் அரசு பரிசீலிக்கவில்லை எனவும் அமைச்சர் பரத்வார் கூறினார்.

# ஓராண்டில்இந்தியாவில் வெளிநாட்டு இந்தியர் முதலீடு ரூ. 477 கோடி

புதுடெல்லி பிப் 26- 1985ம் ஆண்டில்இந்தியாவில் வெளிநாட்டு இந்தியர்கள் செய்த முதலீடு 477 கோடியே 23 லட்ச ரூபாய் என்று மாநிலங்களவையில் தெரிவிக்கப்பட்டது மாநிலங்களவையில் கழக உறுப்பினர் காதர்ஷா: கேள்விக்கு எழுத்து மூலமான பதிலில் மத்திய அமைச்சர் ஜனார்த்தன் பூஜாரி கூறி இருப்பதாவது

1985-ம் ஆண்டு வெளிநாட்டு இந்தியர்கள் 477 கோடியே 23லட்சரூபாயை நேரடியாக இந்தியாவில் முதலீடு செய்துள்ளனர். இவர்கள் வங்கிகளில் டெபாசிட் செய்த தொகை 4814 கோடியே 66 லட்ச ரூபாய் ஆகும்.

இந்தியாவில் முதலீடு செய்யப்படும் இந்தத் தொகைக்கு அரசு பலவகைகளில் சலுகை அளிக்கிறது கவர்ச்சியான வட்டிவிகிதங்களும் தரப்படுகிறது.

மேலும் இந்திய பிரஜா உரிமை இல்லாத இந்தியர்கள் வேறு எந்த நாட்டிலாவது சென்று நிரந்தரமாக தங்க விரும்பினாலும் அவர்கள் தங்கள் முதலீட்டை ஐந்தாண்டு காலத்தில் திரும்ப பெறவும் வழி வகை செய்யப்பட்டுள்ளது.

இவ்வாறு பூஜாரி கூறினார்.

# நேத்தாஜியின் ஜப்பான் நண்பர் மரணம்

டோக்கியோ பிப் 26— இந்திய தேசிய ராணுவத்தை நிறுவிய நேத்தாஜி சுபாஷ் சந்திரபோசின் நெருங்கிய நண்பரும் ஜப்பான் நாட்டு முன்னாள் ராணுவத் தளபதியுமான ஜெனரல் இவாக்சி பியூஜிவரா நேற்று டோக்கியோவில் காலமானார்.

77 வயதான ஜெனரல் இவாக்கி நேத்தாஜிக்கு பல்வேறு வகையில் உதவி புரிந்தவர் ஆவார்.

# தஞ்சாவூர் மாவட்டத்தில் பரவலாக மழை

தஞ்சாவூர், பிப். 26— தஞ்சை மாவட்டத்தில் பரவலாக மழை பெய்துள்ளது.

வங்கக்கடலில் உருவாகியுள்ள காற்று அழுத்த தாழ்வு மண்டலத்தின் விளைவாக தஞ்சை மாவட்டத்தில் பரவலாக மழைபெய்துள்ளது.

சீர்காழியில் 45 மில்லி மீட்டர் மழை பெய்தது.

மணல் மேட்டில் 20மி.மீ மன்னார்குடி 19 மி.மீ. திருவாரூர் 17 மி.மீ, மயிலாடுதுறை 14 மி.மீ, மதுக்கூர் 9 மி.மீ, மழை பெய்துள்ளது.

மேட்டூர் அணையில் நீர் மட்டம் 23 அடியாக உள்ளது.

தற்போது பெய்துள்ள மழை சம்பா பயிருக்கு நல்லது எனக் கூறப்படுகிறது.

காற்று அழுத்த தாழ்வு மண்டலத்தின் விளைவாக அடுத்த 36மணி நேரத்தில் தமிழ்நாட்டில் பரவலாக மழை பெய்யும் என வானிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்துள்ளது.

# ரூ. 1கோடி தங்கசிலைகள் பறிமுதல்: போலீஸ்காரர் கைது

கண்ட்வா, பிப். 26— ரூபாய்1கோடியே34லட்சம் பெறுமானம் உள்ள தங்கச் சிலைகள் மற்றும் தங்கக் கட்டிகளை போலீசார் கைப்பற்றினார்கள்.

ஒரு போலீஸ்காரரின் வீட்டை சோதனையிட்ட போது இந்தப் பொருட்கள் பறிமுதல் செய்யப்பட்டன.

போபால்அருகே ஏன்னாடு என்ற கிராமத்தில் ரகசிய போலீசார் திடீர் சோதனை நடத்தியபோது இந்த போலீஸ்காரர் வசமாக சிக்கினார்.

# பெட்ரோல் விலை: அமைச்சரோடு மதுதந்தவதே கடும் மோதல்

புதுடெல்லி, பிப். 26- மக்கள் சபையில் பெட்ரோல் பொருட்களின் விலை ஏற்றம் பற்றி காரசார விவாதம் நடந்தது.

காங்கிரஸ் உறுப்பினர் சந்தோஷ் மோகன் தேவ், பேசுகையில் ஜனதா கட்சியினர் தங்கள் ஆட்சியை பொற்கால ஆட்சி எனக் கூறுகிறார்கள். அந்த ஆட்சியில் பெட்ரோல் விலை ஏற்றப்பட்டது. ஏன் எனக் கேட்டார்.

சட்ட அமைச்சர் ஏ. கே சென் இது பற்றி ஜனதா உறுப்பினர் மது தந்தவதே என்ன கூறுகிறார் எனக்கேட்டார்.

மதுதந்தவதே:- எங்கள் ஆட்சிக்காலம் பொற்காலம் இல்லை டைமன் காலம் ஆகும்.

நேரு பிரதமராக இருந்த காலத்தில் கூட விலை உயர்த்தப்பட்டதே!

அமைச்சர் சந்திரசேகரன் சிங்: நீங்கள் ஏதாவது செய்வீர்கள் என எதிர் பார்த்தோம். அதற்காக சிலவற்றைவிட்டு வைத்தோம்.

மதுதந்தவதே: தற்போது மீண்டும் நாங்கள் ஆட்சிக்கு வரவேண்டும் என நீங்கள் விரும்புவதாக தெரிகிறது

மக்கள் சபையில் பெட்ரோலிய விலை ஏற்றம் பற்றிய விவாதத்தில் பலஉறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.